எடுத்திருக்கிறார்கள் என்றும் தெரிகிறது. இப்படி குறிப்பிட்ட ஒரு வருஷத்திலே, 1953-லே, ஒரேயடியாக 13 பேர்களை நேரடியாகவும், 1957-லே ஒரேயடியாக உபாத்தியாயர்களிலிருந்து 11 பேர்களையும் எடுத்திருப்பதற்குக் காரணம் என்ன ? அன்றைக்கு இருந்த ராஜாஜி சர்க்காருடைய கொள்கை ஒரு மாதிரியும் இன்றைக்கு இருக்கும் இந்தச் சர்க்காரின் கொள்கை இன்னொரு மாதிரியும் இருப்பதா அதற்குக் காரணம் ?

THE HON. SRI C. SUBRAMANIAM: எந்தக் கொள்கை வேண்டுமென்று கனம் அங்கத்தினர் சொல்கிறார் ?

SRI V. K. KOTHANDARAMAN : எந்தக் கொள்கையாக இருந்தாலும் அனுபவம் பெற்றவர்களைப் போடவேண்டும் என்பதுதான். அன்றைக்கு அம்மாதிரி ஒரேயடியாக டைரக்ட் ரெக்ரூட்மெண்ட் நடந்திருக்க, இன்றைக்கு வேறுவிதமாக இருப்பதால் அப்படித் தோன்றுகிறது.

THE HON. SRI C. SUBRAMANIAM: 1952-53லே ஆந்திரப்பிரிவினைக்கு முன்பு 17 அதிகாரிகள் நேரடியாக நியமிக்கப்பட்டார்கள்.—ஆந்திரத்திற்கும் நமக்கும் சேர்ந்து. பிரிவினையாகும்போது ஆந்திராவுக்கு இரண்டு மூன்று பேர் போய், பாக்கிப்பேர் நம்மிடத்தில் நின்றுவிட்டார்கள். அதன் காரணமாக, நேரடியாக எடுத்த தொகை அதிகமாய்விட்டது. வருகின்ற ஆண்டிலே உபாத்தியாயர்களாக வேலை செய்து கொண்டிருக்கிறவர்களிடமிருந்து அதிகமாக எடுக்கப்பட்டிருக்கிறது.

*Schools without playgrounds in North Arcot District*

* 853 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா —

வடாற்காடு ஜில்லாவிலுள்ள மேனேஜ்மெண்டு பாடசாலைகளில் எந்தெந்த பாடசாலைகளுக்கு விளையாட்டு மைதானம் இல்லை ?

THE HON. SRI C. SUBRAMANIAM : All the Secondary Schools under private managements in the North Arcot district are possessing playing areas.

*Police uniform*

* 856 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to change the uniforms of the Police?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is no proposal under the consideration of the Government for a complete change of the uniform of the Madras Police, but there is a proposal for a change in some of the articles of uniform at present issued to certain Police subordinates.

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that the present uniform is neither attractive nor comfortable to the Police?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I must admit that I am not aware of that.

SRI S. PAKKIRISAMI PILLAI: இப்பொழுது கொடுத்திருக்கும்படியான தொப்பி மிகவும் பளுவாக இருப்பதால் அதைவிட லேசாக இருக்கும்படியாக தொப்பியைச் செய்து அணியும்படியாகச் செய்வார்களா ? மேலும், இரும்புத் தொப்பி அணிவதற்கே அவசியம் இல்லாத காரணத்தால் அதைப் போடாது இருக்கும்படியாக உத்தரவுபோடுவார்களா ?